ஸ்ரீ காமகோடி க்ரந்தாவலி : 58

# ॥ अम्बाष्टकम् ॥

# அம்பாஷ்டகம்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்
அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடன்
கூடியது



ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1.



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
**ஸ்ரீ ஜகத்குரு காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான**
**ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ**
**ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**

श्रीः



श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमच्छङ्करभगवत्पादप्रतिष्ठित-
श्रीकाञ्ची कामकोटिपीठाधिप जगद्गुरु श्रीपादैः क्रियते
नारायणस्मृतिः ।।

श्रीमूकपञ्चशती-मुकुन्दमाला-शिवपादादिकेशान्तवर्णनादीन् गरिष्ठान् ग्रन्थविशेषान् द्राविडचनुवादैः साकं प्रकाशयित्वा आस्तिकानां भक्तिभावमभिवर्धयद्भिः अस्मत्प्रियान्तेवासिभिः श्रीकामकोटिकोशस्थाननिर्वाहकैः अद्य श्रीभगवत्पादादिमहनीयैः सर्वजनोद्धारणार्थमनुगृहीताः भगवन्मूर्तिप्रभेदगुणवर्णनपटीयांसः भक्तिरससर्वस्वभूताः श्रीहनूमत्पञ्चरत्न-सुब्रह्मण्यभुजङ्गादिस्तोत्रतल्लजाः द्राविडचनुवादैः साकं प्रकाशयिष्यन्त इति विदित्वा परमां मुदं भजामः ।

आस्तिकाः एतानि स्तुतिरत्नानि सार्थानुसन्धानं पठन्तः शृण्वन्तश्च भगवद्भक्तिपरवशीकृतस्वान्ताः श्रीचन्द्रमौलीश्वरकृपापात्रीभूताः सकलभाग्यजातं प्राप्नुवन्त्वित्याशास्महे ।

यात्रास्थानम्
इळैयात्तकुटी
शुभकृच्छ्रावणशुद्धप्रथमा

नारायणस्मृतिः ।

ஸ்ரீ:

முத்திரை

**ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யவர்ய**
**ஸ்ரீமத் சங்கரபகவத்பாத ப்ரதிஷ்டித**
**ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு**
**ஸ்ரீபாதை: க்ரியதே நாராயண ஸ்ம்ருதி: ||**

*ஸ்ரீ மூகபஞ்சசதீ - முகுந்தமாலா - சிவபாதாதி கேசாந்தவர்ணனம் முதலிய அரும்பெரும் நூல்களைத் தமிழுரையுடன் வெளியிட்டு ஆஸ்திகர்களின் பக்தி உணர்ச்சியை வளர்க்கும் நம் பிரிய சிஷ்யரான ஸ்ரீ காமகோடி கோசஸ்தான நிர்வாஹகர்கள், இப்பொழுது ஸ்ரீ பகவத்பாதர்கள் முதலிய பெரியோர்கள் அருளிய பக்திமயமான ஸ்தோத்திரங்களைத் தமிழுரையுடன் வெளியிடுவதை அறிந்து மிகவும் சந்தோஷிக்கிறோம்.*

*ஆஸ்திகர்கள் இந்த ஸ்தோத்திர ரத்தினங்களைப் பொருளறிந்து படித்தும் கேட்டும், பகவத் பக்தியில் திளைத்த உள்ளத்தினராய், ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரரின் கிருபைக்குப் பாத்திரராகி, ஸகல பாக்கியங்களையும் பெறுவார்களாக.*

| | | |
|---|---|---|
| *யாத்ராஸ்தானம்*<br>*இளையாத்தகுடி*<br>*சுபக்ருத் ச்ராவண*<br>*சுத்தப்ரதமா* | } | **நாராயண ஸ்ம்ருதிః** |

|| श्रीः ||

# || अम्बाष्टकम् ||

# அம்பாஷ்டகம்



चेटीभवन्निखिलखेटी कदम्बतरुवाटीषु नाकिपटली-
कोटीरचारुतरकोटीमणीकिरणकोटीकरम्बितपदा ।
पाटीरगन्धिकुचशाटी कवित्वपरिपाटीमगाधिपसुता
घोटीकुलादधिकधाटीमुदारमुखवीटीरसेन तनुताम् ॥ १ ॥

சேடீபவந்நிகிலகேடீ கதம்பதருவாடீஷு நாகிபடலீ-
கோடீரசாருதரகோடீமணீகிரணகோடீகரம்பிதபதா |
பாடீரகந்திகுசசாடீ கவித்வபரிபாடீமகாதிபஸுதா
கோடீகுலாததிகதாடீமுதாரமுகவீடீரஸேந தநுதாம் || (1)

**कदम्बतरुवाटीषु** - கடம்ப மரங்களையுடைய உபவனங்களிலே, **चेटीभवन्निखिलखेटी** - ஆகாசத்திலே சஞ்சாரம் செய்யும் ஸித்த சாரண வித்யாதர ஸ்திரீகள் முதலானவர்கள் அனைவரையும் பணிப் பெண்களாகக் கொண்டவர்களும், **नाकिपटली-कोटीर-चारुतर-कोटी-मणी-किरणकोटी-करम्बित-पदा** - தேவர்களின் கூட்டங்களுடைய கிரீடங்களிலே மிக்க வனப்பு வாய்ந்தவையாக மேற்புறங்களிலே அமைந்த மணிகளின் கோடிக்கணக்கான கிரணங்களிலே நானா வர்ணமாக்கப் பெற்ற பாதங்களையுடையவளும், **पाटीर-गन्धि-कुचशाटी-**

சந்தனத்தின் நறுமணங் கமழும் ரவிக்கையையுடைய வளுமான, अगाधिप-सुता - மலையரசனுன ஹிமவானு டைய மகளான தேவி, घोटीकुलात् - குதிரைப் படையி னும், अधिकधाटीम् - சிறந்த நடையையுடைய, कवित्व-परिपाटीं - கவிதையின் முறையை, उदारमुखवीटीरसेन - (கவிதை முதலியவற்றை வழங்கும்) வண்மையுடைய தான (தம்) வாயிலுள்ள தாம்பூலச் சாற்றிஞல், (मे - எனக்கு), तनुताम् - பெருகச் செய்வாளாக.

எல்லா ரஸங்களையும் தன்னிடங்கொண்டதான தேவியாரின் வாயினின்று பெருகும் தாம்பூலச் சாற்றைத் தேவியார் உமிழ்ந்து அதை நான் உட் கொண்டால் எல்லா ரஸங்களையுமுடைய கவிதை களைப் பாடும் சக்தி எனக்கு உண்டாகும் ஆதலால், தேவகணங்களின் பெண்பாலார் முடிதாழ்த்தித் தம் பாதங்களிலே வணங்கவும் உல்லாஸமாக மதுரா புரியி லுள்ள கடம்ப வனங்களிலே உலாவும் தேவியார் தாம்பூலச் சாற்றை உமிழும் பொன்வட்டிலாக என் வாயை அமைத்துக்கொண்டு தேவியாரின் ஸந்நிதியில் புகப்பெறுவேன் ஆவேனே.

कूलातिगामिभयतूलावलिज्वलनकीला निजस्तुतिविधा-
कोलाहलक्षपितकालाऽमरी कुशलकीलालपोषणनभाः ।
स्थूला कुचे जलदनीला कचे कलितलीला कदम्बविपिने
शूलायुधप्रणतिशीला विभातु हृदि शैलाधिराजतनया ॥ २ ॥

கூலாதிகாமிபயதூலாவலிஜ்வலநகீலா நிஜஸ்துதிவிதா-
கோலாஹலக்ஷபிதகாலா'மரீ குஶலகீலாலபோஷணநபா: |
ஸ்துலா குசே ஜலதநீலா கசே கலிதலீலா கதம்பவிபிநே
ஶூலாயுதப்ரணதிஶீலா விபாது ஹ்ருதி ஶைலாதிராஜதநயா ||

**कूलातिगामि-भयतूलावली-ज्वलन-कीला** - கரை புரண்டு பெருகுகின்ற அச்சங்கள் என்னும் பஞ்சுத் தொகுதிகளை எரிக்கும் அக்கினிஜ்வாலையானவளும், **निजस्तुति-विधा-कोलाहलक्षपितकाला** - தன்னை ஸ்துதிப்பது என்னும் செயலின் ஆர்ப்பாட்டத்தாலேயே (ஸ்துதிப்பவர்களின்) மரணம் முதலிய துன்பங்களைப் போக்கும் இயல்பையுடையவளும், **कुशल-कीलालपोषणनभाः** நன்மை என்னும் அமுத மழை பொழிந்து (அடியார்களைப்) போஷிக்கும் மேகம் போன்றவளும், **कुचे स्थूला** - பெருத்த ஸ்தன மண்டலத்தை யுடையவளும், **कचे जलदनीला** - மேகத்தைப் போல, கருநீலமான கூந்தலை யுடையவளும், **कदम्बविपिने** - கடம்ப வனமாகிய மதுராபுரியிலே, **कलितलीला** - திருவிளையாடல் புரிபவளும், **शूलायुधप्रणतिशीला** - திரிசூலத்தை ஆயுதமாகவுடைய பரமசிவனை வணங்கும் ஸ்வபாவத்தை யுடையவளுமான (பிரணய காலத்தில் பரமசிவனுடைய வணக்கத்தைப் பெறக்கூடிய தன்மையை யுடையவளுமான), **शैलाधिराजतनया** - மலையரசனான ஹிமவானின் திருமகளான, **अम्बा** - தேவி, (என்னுடைய), **हृदि मे** - இருதயத்திலே, **विभातु** - நிலை பெற்று விளங்குவாளாக.

தன்னைத் துதிப்பவரின் ஸ்துதிகளையே நெய்யாகக் கொண்டு அவர்களுடைய அச்சங்களை யெல்லாம், பஞ்சுப் பொதியை அக்கினி எரித்துவிடுவது போல, எரிப்பதால் தீ போன்றவளும், நன்மைகளைப் பொழிவதால் மேகம் போன்றவளுமாய், ஹிமவானுக்குப் புத்திரியாக அவதரித்துப் பரமசிவனை வணங்கி அவரையே நாயகராகப் பெற்று, ஆனந்தமாய் மதுரா

புரியிலுள்ள உபவனத்திலே விளையாடும் தேவியார், அமுதமழை பொழியும் ஸ்தன மண்டலத்தோடும், கார்மேகம் போன்ற கூந்தலோடும் அழகுபெற என் இருதயத்திலே ஒளி வீசிக்கொண்டு விளங்குவாளாக.

यत्राशयो लगति तत्रागजा वसतु कुत्रापि निस्तुलशुका
सुत्रामकालमुखसत्राशनप्रकरसुत्राणकारिचरणा ।
छत्रानिलातिरयपत्राऽभिरामगुणमित्राऽमरीसमवधूः
कुत्रासहन्मणिविचित्राकृतिस्फुरितपुत्रादिदाननिपुणा ॥ ३ ॥

யத்ராஶயோ லகதி தத்ராகஜா வஸது குத்ராபி நிஸ்துலசுகா
ஸுத்ராமகாலமுகஸத்ராசநப்ரகரஸுத்ராண காரிசரணா ।
சத்ராநிலாதிரயபத்ரா 'பிராமகுணமித்ரா' மரீஸமவதூஃ
குத்ராஸஹந்மணிவிசித்ராக்ருதி ஸ்புரிதபுத்ராதிதாநநிபுணா ॥

निस्तुलशुका - ஒப்பற்ற கிளியை (தன் கை மணிக் கட்டிலே) யுடையவளும், सुत्राम-काल-मुख-सत्राशन-प्रकर-सुत्राणकारिचरणा - யாகங்களிலே ஹவிர்ப்பாகங்களைப் புஜிப்பவர்களான இந்திரன் யமன் முதலான தேவர்களின் கூட்டங்களையும் பாதுகாக்கும் இயல்புடைய திருவடிகளையுடையவளும், छत्रानिलातिरयपत्रा - (அரச சின்னமான) வெண்குடையையும், காற்றிலும் அதி வேகமாகச் செல்லும் (ஸிம்ஹ) வாஹனத்தையு முடையவளும், अभिरामगुणमित्रा – மனத்தைக் கவர்வதான நற்குணங்களோடு தோழமை பூண்டவளும், कुत्र-असहन्-मणि-विचित्र-आकृति-स्फुरित-पुत्रादि-दान-निपुणा- இந்திர நீலமணி போன்ற வியக்கத்தக்க வடிவுடைய விஷ்ணு போன்ற அழகான நன்மக்கள் முதலியவர்களை

அளிக்க வல்லவளும், (அல்லது कुत्र-आकृतिः, स्फुरित-निपुणा - இந்திர நீல மணி போல் வியக்கத்தக்க வடிவுடையவளும், அழகுள்ள நன்மக்கள் முதலியவர்களை அளிக்க வல்லவளுமான), अमरीसमवधूः - பிராம்மி முதலிய தேவமாதர்களோடு விளங்கும் சக்தியுமான, अगजा - பார்வதி தேவி, यत्र कुत्रापि - எங்கெல்லாம், (मे - என்னுடைய), आशयः - சித்தமானது, लगति - தங்குகின்றதோ, तत्र - அங்கே, वसतु - உறைவாளாக. (அல்லது भवतु இருப்பாளாக.)

என்னுடைய சித்தம் எங்கெங்கெல்லாமோ செல்கின்றது. அதனாலே தேவியை என் சித்தத்தாலே பற்றிக்கொள்ள இயலாது. ஆகையால் தேவியே கருணை கூர்ந்து என் சித்தம் செல்லும் இடமெல்லாம் வாஸம் செய்ய வேண்டும். அப்போதுதான் காற்றினும் கடியதாகச் செல்லும் சிங்கத்தின் மேல் வெண்குடை நிழலிலே தேவி இந்திரநீல மணிபோல் நிறம் பெற்று வீற்றிருப்பதையும், இந்திரன் யமன் முதலான லோகபாலர்களையும், இதர தேவர்களையும் ரக்ஷிக்கும் பாதங்களிலே அவர்கள் வணங்குவதையும், ஈசுவரனைக் குறித்துச் செய்யும் யாகங்களிலே அவர்களுக்கு ஹவிர்ப்பாகங்களை ஜீவனமாக அளிக்கச் செய்து அவர்களைத் தேவி காப்பாற்றுவதையும், நற்குணங்களைத் தன்னோடு என்றும் பழகும் தோழிகளாகக் கொண்டு தேவ மாதர்களோடு சக்தி வடிவமாகப் பழகுவதையும், திருக்கையிலமர்ந்த கிளியோடு கொஞ்சுவதையும், கண்டு வணங்கி, நான் புகழுடைய புத்திரர் முதலான சந்ததிகளைப் பெற்றவன் ஆவேன்.

द्वैपायनप्रभृतिशापायुधत्रिदिवसोपानधूलिचरणा
पापापहस्वमनुजापानुलीनजनतापापनोदनिपुणा ।
नीपालया सुरभिधूपालका दुरितकूपादुदञ्चयतु मां
रूपाधिका शिखरिभूपालवंशमणिदीपायिता भगवती ॥ ४ ॥

த்வைபாயநப்ரப்ருதிசாபாயுதத்ரிதிவஸோபாநதூலிசரணா
பாபாபஹஸ்வமநுஜாபாநுலீநஜநதாபாபநோதநிபுணா ।
நீபாலயா ஸுரபிதூபாலகா துரித கூபாதுதஞ்சயது மாம்
ரூபாதிகா ஶிகரிபூபாலவம்ஶமணிதீபாயிதா பகவதீ ॥ (4)

**द्वैपायन-प्रभृति शापायुध - त्रिदिव - सोपान - धूलिचरणा-** *வேத வியாஸர் முதலான முனிவர்கள் தேவலோகத்திற்குச் செல்வதற்கான படிக்கட்டுகளைப் போன்றபாத தூளிகளையுடைய திருப்பாதங்களை யுடையவளும்,* **पापापह-स्वमनु-जापानुलीन-जन-तापापनोद-निपुणा** - *பாவங்களைப் போக்கும் இயல்புடைய தன் மந்த்ரத்தை ஜபிப்பதிலே பற்றுடையவர்களான ஜனங்களுடைய (மூவகைத்) தாபங்களையும் போக்கும் திறமை வாய்ந்த* **सुरभिधूपालका** - *நறுமணமுள்ள வாசனைப் புகையாலே பரிமளிக்கும் நெறிந்த கூந்தலை யுடையவளும்,* **रूपाधिका**- *மிக்க அழகு வாய்ந்தவளும்,* **नीपालया** – *கடம்பமரத்தினடியிலே வசிப்பவளும்,* **शिखरिभूपालवंशमणिदीपायिता**- *மலையரசனுடைய வம்சத்தை ஒளிபெறச் செய்யும் மணிவிளக்காக இருப்பவளுமான,* **भगवती**-*பகவதியான பிராட்டி,* **मां** - *என்னை,* **दुरितकूपात्** - *பாவக் கிணற்றினின்றும்,* **उदञ्चयतु** - *கரையேற்றி விடுவாளாக.*

*நிக்ரஹாநுக்ரஹ சக்தியுடையவர்களான வேத வியாஸர் முதலான தூய முனிவர்களும் தேவியின் பாத*

தூளிகளையே படிக்கட்டாகக் கொண்டு மேலுலகம் செல்லுகிறார்கள். தாபத்திரயங்களைப் போக்கிக் கொள்ள விரும்பும் மானிடர் அனைவரும் பாவங்களை யெல்லாம் போக்கவல்ல தேவி மந்திரங்களை ஜபித்து அவற்றிலே மனத்தை லயிக்கச் செய்கிறார்கள். மலையரசனுடைய வம்சத்தை விளங்கச் செய்யும் மணி விளக்கைப்போல் ஒளிர்பவளாய், மதுராபுரியிலே கூந்தலழகு வாய்ந்த அதி ஸௌந்தரியாக வாழும் என் பிராட்டி, அவ்வடிவழகாலே என்னை வணக்கமுடைய வனாக்கி, மனனாதி சக்திகள் ஒரு சிறிதும் வாய்க்கப் பெறாது பாவக்கேணியிலே விழுந்து தவிக்கும் என்னை யும் அக்கிணற்றிலே மூழ்கிப் போகாமல் கரையேற்றி விடுவாளாக.

याऽऽलीभिरात्मतनुताली सकृत्प्रियकपालीषु खेलति भय-
व्यालीनकुल्यसितचूलीभरा चरणधूलीलसन्मुनिवरा ।
बालीभृति श्रवसि तालीदलं वहति याऽलीकशोभितिलका
साऽलीकरोतु मम काली मनः स्वपदनालीकसेवनविधौ ॥ ५ ॥

யாலீபிராத்மதநுதாலீ ஸக்ருத்ப்ரியகபாலீஷு கேலதி பய
வ்யாலீநகுல்யஸிதசூலீபரா சரணதூலீலஸந்முநிவரா ।
வாலீப்ருதி ஶ்ரவஸி தாலீதலம் வஹதி யாலீகஶோபிதிலகா
ஸாலீகரோது மம காலீ மநః ஸ்வபதநாலீகஸேவநவிதௌ ॥

**या** - எவள், **प्रियक-पालीषु** - கடம்ப மரங்களின் வரிசைகளுக்கிடையே, **आलीभिः सकृत्** - தோழிகளோடு கூட, **खेलति** - விளையாடுகிறாளோ, **या** - எவள், **बालीभृति** - வாளியைப் பூணுகவுடைய, **श्रवसि** - காதிலே, **तालीदलं** -

பனைக் குருத்தோலையை, वहति - அணிந்துகொண்டிருக்கிறாள், भयव्यालीनकुली - அச்சங்கள் என்னும் பாம்புகளுக்குக் கீரியாயிருக்கிறவளும், असितचूलीभरा. கரிய கூந்தலை யுடையவளும், चरणधूली-लसन्मुनिवरा - பாத தூளிகளில் விளங்கும் முனிவரர்களை யுடையவளும், अलीकशोभितिलका - நெற்றியிலே பிரகாசிக்கும் திலகப் பொட்டை யுடையவளுமான, सा - அந்த, आत्म-तनु-ताली - தன் மேனியின் நிறத்தால் பனை போன்றவளான, काली - காளிதேவி, स्वपदनालीक-सेवन-विधौ - தன்னுடைய பாதத் தாமரைகளில் ஈடுபட்டிருக்கும் விஷயத்தில், मम मनः - என்னுடைய மனத்தை, अलीकरोतु – வண்டுபோல் செய்வாளாக.

தாமரை மலரில் உறைவதிலே வண்டு ஈடுபட்டிருப்பதைப் போல என் மனத்தையும் உன் பாத கமலங்களிலே ஈடுபடுவதாகச் செயயவேண்டும். அப்படி உன்னருகிலே ஸேவை செய்துகொண்டிருந்தால், ஜனன மரணாதி பயம் அனைத்தும் கீரியைக் கண்ட பாம்புகளைப் போல நீங்கிப்போம்; ஆனபடியால் கடம்பவனத்திலே ஸகிகளோடு நீ விளையாடுவதையும், நின் காதிலே விளங்கும் பொன்மயமான வாளிக்கு நேராய் வெறும் பனையோலைக் குருத்தை நீ உல்லாசமாகப் பூணுவதையும், பாத தூளிகளைப் போல முனிவரர்கள் உன் பாதங்களிலே இடையறாது லயித்திருப்பதையும், பனைபோல் ச்யாமளமான உன் உருவின் பாதாதிகேசம் அமைந்த பேரழகையும், அவ் வடிவழகை உன் நெற்றியில் அமைந்த திலகம் எடுத்துக் காட்டுவதையும் கண்டு களிப்பவனாய் உன் பாத மூலத்திலே விழுந்து கிடப்பேன்.

न्यङ्काकरे वपुषि कङ्कादिरक्तपुषि कङ्कादिपक्षिविषये
त्वं कामनामयसि किं कारणं हृदय पङ्कारिमेहि गिरिजाम् ।
शङ्काशिलानिशितटङ्कायमानपदसंकाशमानसुमनो-
झंकारिभृङ्गततिमङ्कानुपेतशशिसंकाशिवक्त्रकमलाम् ॥ ६ ॥

ந்யங்காகரே வபுஷி கங்காதிரக்தபுஷி
கங்காதிபக்ஷிவிஷயே
த்வம் காமநாமயஸி கிம் காரணம் ஹ்ருதய
பங்காரிமேஹி கிரிஜாம் ।
ஶங்காஶிலாநிஶிதடங்காயமாநபத—
ஸங்காஶமாநஸுமநோ-
ஜங்காரிப்ருங்கததிமங்காநுபேதஶஶி-
ஸங்காஶிவக்த்ரகமலாம் ॥ (6)

हृदय - *மனமே!* त्वं - *நீ,* न्यङ्काकरे - *நெளியும் புழுக்களுக்கு உறைவிடமாயும்,* कङ्कादिरक्तपुषि - *கழுகு முதலிய பிராணிகளின் இரத்த மாம்சங்களால் புஷ்டியை அடைவதாயும்,* कङ्कादि-पक्षिविषये-*கழுகுமுதலியபறவைகளுக்குரிய உணவாயுமுள்ள,* वपुषि - *உடலின்மீது,* कामनाम् अयसि-*ஆசை கொள்கிறாய்.* किं कारणं - *(இதற்கு) காரணம் என்ன?* शङ्काशिला-निशितटङ्कायमान-पदसंकाश-मान-सुमनो-झंकारि-भृङ्ग-ततिम् - *அச்சங்கள் என்னும் பாறைங்கற்களுக்கு (அவற்றைப் பிளக்கும்) கூரான கல்லுளிகளான திருப்பாதங்களிலே விளங்கும் புஷ்பங்களில் ஜங்காரஞ்செய்யும் வண்டு வரிசைகளையுடையவளும்,* अङ्कानुपेत-शशि-संकाशि-वक्त्र-कमलां - *களங்க மற்ற சந்திரனைப்போல் விளங்கும் திருமுகத் தாமரையையுடையவளும்,* पङ्कारिं-*பாவமயமான சேற்றிற்கு விரோதியாய் அதை முற்றும் அழிப்பவளுமான,* गिरिजाम्-*பர்வதகுமாரியை,* एहि - *சென்றடைவாய்.*

ஏ மனமே! நீ இவ்வுடலைப் பேணுகிறாயே; இது புழுக்கள் வாழும் கூடன்றோ? மாமிசம் முதலிய வற்றால் இதனைப் போஷித்தாலும் இறுதியில் இது கழுகு முதலியவற்றிற்கே உணவாகுமன்றோ? திடமாகக் கொண்ட அச்சங்கள் அனைத்தையும் இடித்துப் பொடியாக்கும் உளியைப் போன்றவை தேவியின் பாதங்கள்; அவைகளிலே அடியார்கள் அர்ச்சித்த மலர்களிலுள்ள தேனைப் பருக வண்டுகள் கூட்டங் கூட்டமாக அங்கே வந்து, தேனைப் பருகி ரீங்காரம் செய்கின்றன. நீயும் தேவியை நாடிச் சென்று உன் பாவங்களாகிய சேற்றை நீக்குவதான கடாக்ஷத்தை வேண்டி, களங்கமற்ற சந்திர மண்டலத்தை யொத்த தேவியின் முகமண்டலத்தை நோக்கிக்கொண்டு அவளுடைய பாதமூலத்திலேயே கிடப்பாயாக.

**कुम्बावतीसमविडम्बा गलेन नवतुम्ब्याभवीणसविधा**
**शं बाहुलेयशशिबिम्बाभिराममुखसंबाधितस्तनभरा ।**
**अम्बा कुरङ्गमदजम्बालरोचिरिह लम्बालका दिशतु मे**
**बिम्बाधरा विनतशम्बायुधादिनिकुरम्बा कदम्बविपिने ॥७॥**

கும்பாவதீஸமவிடம்பா கலேந
நவதும்ப்யாபவீணஸவிதா
ஶம் பாஹுலேயஶஶிபிம்பாபிராம-
முகஸம்பாதிதஸ்தநபரா ।
அம்பா குரங்கமதஜம்பாலரோசிரிஹ
லம்பாலகா திஶது மே
பிம்பாதரா விநதஶம்பவாயுதாதி-
நிகுரம்பா கதம்பவிபிநே ॥ (7)

**कुम्बावती-सम-विडम्बा** - வேடஸ்த்ரீ வேஷந்தரித்தவளும், **गलेन-नवतुम्ब्याभ-वीण-सविधा** - (இன்னிசையுடைய) தன் தொண்டையால் புதிய சுரைக்காய்க் குடத்தோடு விளங்குவதும், ஸ்வர ஸஞ்சாரத்தையுடையதுமான வீணையைப் போன்றவளும், **बाहुलेय-शशिबिम्बाभिराम-मुख-संबाधित-स्तनभरा** - முருகக் கடவுளின் சந்திர மண்டலத்தைப் போன்ற அழகிய முகங்களாலே நெருக்கப்பட்ட ஸ்தனபாரத்தை யுடையவளும், **कुरङ्गमद-जम्बाल-रोचिः**-(மான்மதக் குழம்பை) கஸ்தூரிக் குழம்பைப் பூசிக்கொண்டு காந்தியோடு விளங்குபவளும், **लम्बालका** - நீண்ட தலைமயிரை யுடையவளும், **बिम्बाधरा** - கோவைக் கனிபோன்ற உதடுகளையுடையவளும், **कदम्बविपिने** - கடம்பவனத்திலே, **विनतशाम्बायुधादि-निकुरम्बा** - தன்னை வணங்கிக்கொண்டிருக்கும் தேவேந்திரன் முதலான தேவர்களின் கூட்டங்களையுடையவளுமான, **मे अम्बा** - என் தாயாகிய தேவி, **इह**- இங்கே, **शं** - மங்களத்தை, **मे दिशतु** - எனக்கு அளிப்பாளாக.

கடம்பவனம் என்னும் காட்டிலே கஸ்தூரியைப் பூசிக்கொண்டு திரியும் வேடப்பெண்ணைப் போல் விளங்குகிறாள் தேவி; ஆயினும், இந்திராதி தேவர்கள் அவளை அடிவணங்கி, வீணையை யொத்ததான அவளது தொண்டையினின்றும் செங்கனி வாயின் வழியே வெளிவரும் சொற்களின்படி நடக்கக் காத்திருக்கிறார்கள். அவள் ஒக்கலிலே அணைத்துக் கொண்டிருக்கும் ஷண்முகனோ தன் ஆறுமுகங்களையும் அவளுடைய ஸ்தனங்களிலே முழுக்கிக்கொண்

டிருக்கிருன்; அவனைப் பெற்ற தாயே எனக்கும் தாயாதலால், என்னைத் தள்ளிவிடாமல் எனக்கு ஸகல மங்களங்களையும் அளிப்பாளாக.

इन्धानकीरमणिबन्धा भवे हृदयबन्धावतीव रसिका
संधावती भुवनसंधारणेऽप्यमृतसिन्धावुदारनिलया ।
गन्धानुभावमुहुरन्धालिवीतकचबन्धा समर्पयतु मे
शंधाम भानुमपि रुन्धानमाशु पदसंधानमप्यगसुता ॥ ८ ॥

இந்தாநகீரமணிபந்தா பவே
ஹ்ருதயபந்தாவதீவ ரஸிகா
ஸந்தாவதீ புவநஸந்தாரணே—
ப்யம்ருதஸிந்தாவுதாரநிலயா ।
கந்தாநுபாவமுஹுரந்தாலிவீதகசபந்தா
ஸமர்ப்பயது மே
ஶம்தாம பாநுமபி ருந்தாநமாஶு
பதஸந்தாநமப்யகஸுதா ॥ (8)

**इन्धान-कीर-मणिबन्धा** - (இங்கு இருப்பதால்) பிரகாசிக்கின்ற கிளியைக் கை மணிக்கட்டிலே யுடையவளும் (அல்லது, கருடமணிகள் கோத்த மாலையாலே பிரகாசிப்பவளும்), **हृदयबन्धौ** - காதலனை, **भवे** – பரமசிவனிடத்தில், **अतीव रसिका** – மிகவும் இன்புறும் இயல்புடையவளும், **भुवनसंधारणे** - உலகங்களைக் காப்பதிலே, **संधावती** - பிரதிஜ்ஞை செய்துகொண்டவளும், **अमृतसिन्धौ उदार-निलया**: அமுதக் கடலையே சிறந்த வாஸஸ்தானமாக உடையவளும், **गन्धानुभाव-मुहुरन्धालि-**

वीतकचबन्धा -(பூக்களிலுள்ள) நறுமணத்தை அநுப விப்பதால் அடிக்கடி களிமயக்கத்தால் கண் தெரியா தவையான வண்டுகள் பரவிய மயிர் முடியை உடைய வளுமான, अगसुता - பர்வத குமாரியாகிய தேவீ, भानुम् अपि रुन्धानं - (தன் தேஜஸ்ஸினால்) சூரியனைக் கூட அடக்குவதாயும். शंधाम - மங்களங்களுக்கு உறைவிடமாயும் உள்ள, पद्संधानं - அடியிணையை, मे - எனக்கு, आशु - (விரைவிலே) உடனே, समर्पयतु - அளிப் பாளாக.

தேவியானவள் பர்வதராஜனுடைய மகளாய் அவதரித்து, கிளியோடு விளையாடும் கன்னிப்பருவத் திலேயே பரமசிவனிடம் காதல் பூண்டு, அவனுடைய இல்லக்கிழத்தியாகி, அமிர்தஸாகரத்தில் வாழ்ப வளாய் ஸகல உலகங்களையும் பாதுகாப்பதென்று விரதம் பூண்டு விளங்குகிறாள். அவளுடைய திருவடி கள் கதிரவனைக் காட்டிலும் ஒளி மிக்கவை; மங்களங் களுக்கெல்லாம் உறைவிடமானவை. திருமுடியில் சூடிய மலர்களின் நறுமணத்தை நாடி, அங்குள்ள மதுவையுண்டு மதம் பிடித்துக் கண் தெரியாமல் அலையும் வண்டுகளுக்கு நறுமணங்கமழும் தன் கேசத்தை அளிக்கும் தேவி உலகனைத்தையும் காப்ப வள் ஆதலால், தன் பாதமலர் இரண்டையும், வேறொன்றும் வேண்டாத எனக்கு, இப்பொழுதே தந்தருளுவாள் என்பது நிச்சயம்.

**अम्बाष्टकं समाप्तम् ।**

**அம்பாஷ்டகம் முற்றிற்று**

---

ஸ்ரீ சந்த்ரமௌலீச்வராய நம:

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

## சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் பல படங்களுடனும் ஸ்ரீ ஆசார்யாளுடைய அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... | .... 0—60 |
| 2. | ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் உரையும் கூடியது .... .... | .... 0—60 |
| 3. | ஸ்ரீ ப்ரச்னோத்தர ரத்னமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... | .... 0—25 |
| 4. | ஸ்ரீ மூகபஞ்சசதீ—ஸம்ஸ்கிருத மூலமும் (தமிழுரையுடனும்) .... .... | .... 2—50 |
| 5. | ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும் .... | .... 0—87 |
| 6. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் | .... 2—50 |
| 7. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்கிருதத்தில் .... | .... 0—40 |
| 8. | —ஷை—தமிழில் ச்லோகமும், நாமாவளியும்.... | .... 0—30 |
| 9. | ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... | .... 0—87 |
| 10. | விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் ஆங்கில அனுவாதங்களும் | .... 0—75 |
| 11. | ஸ்ரீ சாந்தி விலாஸம்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... | .... 0—75 |
| 12. | மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... | .... 0—62 |
| 13. | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது | 1—75 |
| 14. | ஸ்ரீ துர்கா சந்த்ர கலாஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளியது .... .... | ... 0—50 |
| 15. | ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது .... .... | .... 0—75 |

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்

4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1